33 T I

97153

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)

ඉතිහාසය I
வரலாறு I
History I

පැය එකයි
ஒரு மணித்தியாலம்
One hour

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
* **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (X) இடுக.**
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** பின்வருவனவற்றுள் இலங்கையின் வரலாறு தொடர்ச்சியாக எழுதப்பட்ட நூல் எது?
(1) தீபவம்சம் (2) மகாவம்சம் (3) பூஜாவலிய (4) ராஜாவலிய

**2.** ஆக்கிரமிப்பாளராக இருந்தபோதும் நேர்மை, நீதி மிக்க ஆட்சியைக் கொண்டிருந்தவராக மகாவம்சத்தில் குறிப்பிடப்படும் ஆட்சியாளன் யார்?
(1) எல்லாளன் (2) இராஜராஜன்
(3) ஸ்ரீமாறஸ்ரீ வல்லபன் (4) இராஜேந்திர சோழன்

**3.** கைவிடப்பட்ட குளங்களை அண்டிய கிராமம் எப்பெயரால் இனங்காணப்பட்டது?
(1) பரிக்கித்த கிராமம் (2) அபரிக்பித்த கிராமம்
(3) நியம் கிராமம் (4) ஒலகம்

**4.** பின்வருவனவற்றுள் கிராமத் தலைவன் ஆகுவதற்குத் தேவையெனக் கருதப்பட்ட முக்கிய தகைமை எது?
(1) அரசியல் அனுபவம்
(2) பொருளாதார ரீதியில் சொத்துச் செல்வம் கொண்டிருத்தல்
(3) கிராம மக்களிடையே பிரபலம் பெற்றிருத்தல்
(4) உயர் குலத்தில் பிறந்திருத்தல்

**5.** இந்த நாட்டை நிர்வாக அலகுகளாகப் பிரித்து அந்தந்தப் பிரிவுகளுக்குப் பொறுப்பாக மந்திரிமாரை நியமித்தவராகக் கருதப்படும் முதல் ஆட்சியாளன்
(1) பண்டுகாபய மன்னன் (2) துட்டகைமுனு மன்னன்
(3) வசப மன்னன் (4) முதலாம் விஜயபாகு மன்னன்

**6.** பின்வரும் விடயங்களில் நாட்டின் பொருளாதாரத்தைப் பலப்படுத்துவதற்கு முதலாம் விஜயபாகு மன்னன் பின்பற்றிய முக்கிய நடவடிக்கை
(1) பொலன்னறுவையைத் தனது நிர்வாக நிலையமாகத் தெரிவு செய்தமை.
(2) சோழர்களிடமிருந்து நாட்டை விடுவித்தமை.
(3) அயல் நாடுகளுடன் நட்புறவை ஏற்படுத்தியமை.
(4) பாரியளவிலான குளக்கட்டுக்களை நிர்மாணிக்க ஆரம்பித்தமை.

**7.** பொருளாதாரத்துக்கு செய்த சேவை காரணமாக தெய்வநிலை பெற்ற மன்னன்
(1) வசபன் (2) மகாசேனன்
(3) தாதுசேனன் (4) மகா பராக்கிரமபாகு

[பக். 2 ஐப் பார்க்க

**8.** பின்வரும் நிரல் I இல் மன்னர்கள் சிலரின் பெயர்களும் நிரல் II இல் இம் மன்னர்களுடன் தொடர்புடைய சில விடயங்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. நிரல் I இற்கு ஏற்ப நிரல் II இனைப் பொருத்தும்போது வரும் சரியான விடை எது?

| நிரல் I | நிரல் II |
|---|---|
| 1. பண்டுகாபய மன்னன் | A - நாட்டை ஐக்கியப்படுத்தல் |
| 2. பாதிகாபய மன்னன் | B - முதன் முறையாக கிராமங்களின் எல்லைகள் தீர்மானிக்கப்படுதல் |
| 3. துட்டகைமுனு மன்னன் | C - கலாவாவி அமைக்கப்படுதல் |
| | D - தூதுவர்களை உரோமுக்கு அனுப்புதல் |

(1) A, B, C (2) A, C, D (3) B, A, C (4) B, D, A

**9.** புராதன காலந்தொட்டு இலங்கை சர்வதேச வியாபார நடவடிக்கைகளில் முக்கியத்துவம் பெறுவதற்கான காரணம்
(1) சிறிய தீவாக அமைந்திருத்தல்
(2) இந்தியாவிலிருந்து பிரிந்து அமைந்திருத்தல்
(3) இந்து சமுத்திரத்தின் மத்திய நிலையத்தில் அமைந்திருத்தல்
(4) இயற்கையான திருகோணமலைத் துறைமுகம்

**10.** பின்வருவனவற்றுள் குளக்கட்டு இடிந்து விழாமலிருப்பதற்கு பின்பற்றப்பட்ட செயன்முறை எது?
(1) இயற்கையான கற்பாறைகளைத் தெரிவுசெய்து குளக்கட்டை அமைத்தல்
(2) பலமான கருங்கற்களைக் கொண்டு குளக்கட்டை அமைத்தல்
(3) மடைக்கதவு மூலம் மேலதிக நீரை வெளியேற்றுதல்
(4) அலை தாங்கியை பலம் வாய்ந்ததாக அமைத்தல்

- பின்வரும் A தொடக்கம் E வரையிலான கூற்றுகளை நன்கு வாசித்து **11** ஆம் **12** ஆம் வினாக்களுக்கு விடை எழுதுக.

A - பூங்காக்களை நிர்மாணித்தல் பற்றி மேன்மையான அறிவு காணப்படுதல்
B - பாதுகாப்புக்காக நீர் அகழி, செங்கல்லினாலான மதில் என்பன பயன்படுத்தப்படுதல்
C - நவீன கொங்கிறீட் தொழினுட்பத்திற்குச் சமனாக அத்திவாரம் அமைத்தல் இருத்தல்
D - சுகாதாரமும் உடல் நலமும் பற்றிய ஆழமான அறிவைக் கொண்டிருத்தல்
E - சத்திர சிகிச்சைக்கான உபகரணங்கள் பயன்படுத்தப்பட்டதற்கான சான்றுகள் கண்டுபிடிக்கப்பட்டிருத்தல்

**11.** சீகிரியா தொடர்பான தகவல்களைக் குறிக்கும் விடை எது?
(1) A, B (2) B, C (3) C, D (4) D, E

**12.** ஆலாஹன பிரிவெனா தொடர்பான தகவல்களைக் குறிக்கும் விடை எது?
(1) A, B (2) B, C (3) C, D (4) D, E

**13.** குடிநீரின் குறிப்பிட்ட தரத்தையும் குளிர்ச்சியையும் பேணிக்கொள்வதற்கு புராதன காலத்தில் கட்டப்பட்ட நிர்மாணிப்பு எது?
(1) குளங்கள் (2) ஆண்டிய கிணறு (3) ஊராகெட கிணறு (4) அணைக்கட்டு

**14.** சூழலைப் பாதுகாப்பதற்குப் பின்பற்றப்பட வேண்டிய சட்டங்கள் உள்ளடங்கிய கல்வெட்டு எது?
(1) கல்பொத்த கல்வெட்டு (2) அனுராதபுர கல்வெட்டு
(3) பனாகடுவ செப்புத்தகடு (4) தோணிகல கல்வெட்டு

**15.** எங்கள் நாட்டில் மிகப் பழைய காலத்திலிருந்தே மக்கள் கஞ்சி வகைகளைத் தமது உணவில் சேர்த்துக் கொள்வதற்கான முக்கிய காரணம் யாது?
(1) தயாரிப்பதற்கு இலகுவானதாயிருத்தல்
(2) இலகுவில் சமிபாடு அடையக்கூடியதாயிருத்தல்
(3) கஞ்சிக்குத் தேவையான பொருள்கள் பெருமளவில் கிடைத்தல்
(4) உடல் வலிமையை அதிகரிக்கச் செய்தல்

[பக். 3 ஐப் பார்க்க

**16.** கலிங்க மாகன், சந்திரபானு ஆகியோரின் ஆக்கிரமிப்பிலிருந்து நாட்டை விடுவித்த ஆட்சியாளன்
(1) முதலாம் விஜயபாகு
(2) முதலாம் பராக்கிரமபாகு
(3) இரண்டாம் பராக்கிரமபாகு
(4) மூன்றாம் விஜயபாகு

**17.** இலங்கையின் இராசதானிகள் சில நிரல் **I** இலும் புராதன நிர்வாகப் பிரிவுகள் சில நிரல் **II** இலும் தரப்பட்டுள்ளன. நிரல் **I** இற்கு ஏற்ப நிரல் **II** இனை பொருத்தும்போது வரும் சரியான விடை எது?

| நிரல் I | நிரல் II |
|---|---|
| 1. அனுராதபுரம் | A - மாயரட்டை |
| 2. கண்டி | B - இராசரட்டை |
| 3. கோட்டை | C - உருகுணைரட்டை |
| | D - மலயரட்டை |

(1) A, B, C
(2) A, B, D
(3) B, A, C
(4) B, D, A

**18.** முதன் முறையாகக் கண்டியை சுதந்திர இராச்சியமாகக் கட்டியெழுப்பிய அரசன்
(1) முதலாம் இராஜசிங்கன்
(2) சேன சம்மத விக்கிரமபாகு
(3) ஜயவீர பண்டார
(4) முதலாம் விமலதர்மசூரியன்

- பின்வரும் A, B என்ற கூற்றுக்களைக் கொண்டு **19** ஆம் வினாவுக்கு விடை எழுதுக.
  A - தேசிய அரசுகளின் தோற்றம்
  B - வர்த்தக விருத்தி

**19.** ஐரோப்பாவில் மறுமலர்ச்சி தொடர்பில்
(1) A உம் B உம் சரியானவை.
(2) A உம் B உம் பிழையானவை.
(3) A சரியானது என்பதோடு B பிழையானது.
(4) A பிழையானது என்பதோடு B சரியானது.

**20.** தொலைநோக்கியைக் கண்டுபிடித்தவர் யார்?
(1) நிக்கலஸ் கொபர்னிகஸ்
(2) ஜொஹென்ஸ் கெப்லர்
(3) ஜொஹேன்ஸ் கூடன்பேர்க்
(4) கலிலியோ கலிலி

**21.** கைத்தொழில் புரட்சியின்போது சாயம், மருந்துகள், எண்ணெய், பசளை ஆகிய உப உற்பத்திகளின் காரணமாக விருத்தியடைந்த கைத்தொழில் எது?
(1) நெசவுக் கைத்தொழில்
(2) இரும்பு உருக்குக் கைத்தொழில்
(3) நிலக்கரிக் கைத்தொழில்
(4) விவசாயக் கைத்தொழில்

**22.** பின்வருவனவற்றுள் கைத்தொழில் புரட்சியின்போது பயிர்ச் செய்கையில் நிலமாற்றுமுறை அறிமுகம் செய்யப்பட்டதால் ஏற்பட்ட அனுகூலம் எது?
(1) பயிர்களில் நோய் பரவுதல் குறைவடைதல்
(2) விதைப்பதற்கான விதையின் அளவு குறைவடைதல்
(3) குறைந்தளவு நீர் வசதியுடன் பயிர் செய்யக் கூடியதாயிருந்தமை
(4) எத்தகைய கால நிலைமைகளிற்கும் பயிர் தாக்குப்பிடித்தல்

**23.** கீழே A தொடக்கம் D வரை தரப்பட்டுள்ள இடங்களில் ஆங்கிலேயரால் இந்தியாவில் தாபிக்கப்பட்ட வர்த்தக நிலையங்களைக் குறிப்பிடும் விடை எது?
A - மதராஸ்
B - பம்பாய்
C - பாண்டிச்சேரி
D - சந்திரநகர்

(1) A, B
(2) A, D
(3) B, C
(4) C, D

**24.** கண்டி இராசதானி உத்தியோகபூர்வமாக பிரித்தானியரிடம் ஒப்படைக்கப்பட்டது,
(1) ஸ்ரீ விக்கிரம இராஜசிங்க மன்னன் கைது செய்யப்பட்ட பின்னர் ஆகும்.
(2) 1815 கண்டி உடன்படிக்கை கைச்சாத்திடப்பட்ட பின்னர் ஆகும்.
(3) 1818 பிரகடனத்தின் பின்னர் ஆகும்.
(4) 1833 கோல்புறூக்-கமரன் சீர்திருத்தங்களின் பின்னர் ஆகும்.

97153

**25.** இலங்கையில் திருகோணமலைத் துறைமுகம் தொடர்பில் ஆங்கிலேயர் கவனம் செலுத்தியமைக்கான முக்கிய காரணம்

(1) இந்தியாவின் கிழக்குக் கரையில் தமது கடல் ஆதிக்கத்தைப் பாதுகாப்பதற்கான தேவை
(2) திருகோணமலைத் துறைமுகத்தைச் சுற்றியுள்ள பகுதிகளில் பெறுமதி வாய்ந்த வர்த்தகப் பொருட்களைப் பெறக் கூடியதாயிருந்தமை
(3) வெளிநாட்டு வியாபாரத்துக்குப் பொருத்தமானதாகக் காணப்பட்டமை
(4) பெரிய கப்பல்களுக்குப் பொருத்தமான ஆழமான கடல் துறைமுகமாக இருந்தமை

**26.** ஆங்கிலேயர் கண்டி இராச்சியத்தை இலகுவாகக் கைப்பற்றுவதற்கு ஏதுவான முக்கிய காரணி,

(1) பொது மக்கள் ஆங்கிலேயருடன் ஒன்று சேர்ந்தமை
(2) ஆங்கிலேயரின் இராணுவ பலம்
(3) மன்னனுக்கும் மக்களுக்கும் இடையிலான தொடர்பு தூரவிலகியிருந்தமை
(4) ஆங்கிலேயருக்கு கரையோரப் பிரதேச மக்கள் ஆதரவு வழங்கியமை

**27.** கொழும்பு சாஹிரா கல்லூரியைத் தாபித்தவர் யார்?

(1) ஹென்றி ஸ்ரீல் ஒல்கொட் (2) ஒராபி பாஷா
(3) எம். சி. சித்தி லெப்பை (4) ரி. பீ. ஜயா

**28.** பின்வருவனவற்றுள் சேர்ச் மிஷனரி சங்கத்தினால் வெளியிடப்பட்ட வெளியீடு எது?

(1) லக்மினி பஹன (2) மாசிக்க தேக்க
(3) லங்கா லோகய (4) சரசவி சந்தரஸ

**29.** பின்வருவனவற்றுள் ஐரோப்பிய வணிகர்களினால் முன்னெடுக்கப்பட்ட போராட்டங்களின் முக்கிய நோக்கம் எது?

(1) ஆளுநரின் அதிகாரங்களை மட்டுப்படுத்தல்
(2) சட்டவாக்கக் கழகத்துக்கு இனவாரிப் பிரதிநிதித்துவத்தை நீக்குதல்
(3) சட்டவாக்கக் கழகத்துக்கு நியமிக்கப்படும் உத்தியோகச் சார்புள்ள அங்கத்தவர் எண்ணிக்கையை அதிகரித்தல்
(4) பெருந்தோட்டப் பயிர்செய்கைக்குத் தேவையான உட்கட்டமைப்பு வசதிகளை விருத்தி செய்தல்

**30.** டொனமூர் சீர்திருத்தத்தினால் வாக்களிக்கும் உரிமை வழங்கப்பட்டது,

(1) படித்த இலங்கையர்களுக்கு மட்டும் (2) 18 வயதுக்கு மேற்பட்ட ஆண்களுக்கு மட்டும்
(3) 18 வயதுக்கு மேற்பட்ட அனைவருக்கும் (4) 21 வயதுக்கு மேற்பட்ட அனைவருக்கும்

**31.** இலங்கை தேசிய காங்கிரசின் முதல் தலைவர் யார்?

(1) ரி. பி ஜயதிலக (2) எப். ஆர். சேனநாயக்க
(3) பொன்னம்பலம் அருணாசலம் (4) ஜேம்ஸ் பீரிஸ்

**32.** அரசுக் கழகத்தில் இலங்கையரான அமைச்சர்களுக்கு **உரித்தல்லாத** துறை

(1) கல்வி (2) நிதி நடவடிக்கைகள்
(3) உள்ளூராட்சி (4) சுகாதாரம்

**33.** பின்வருவனவற்றுள் இலங்கையில் தேயிலைப் பயிர்ச்செய்கைக்கு **பொருத்தமற்ற** பிரதேசம் எது?

(1) தாழ்நில ஈரவலயம் (2) உலர் வலயம்
(3) மலைப்பிரதேச ஈரவலயம் (4) ஈரமான உயர மலைப் பிரதேசம்

**34.** இந்நாட்டில் சிங்கோனாப் பயிர்ச்செய்கை தோல்வியடைந்தமைக்கு அடிப்படையான முக்கிய காரணி யாது?

(1) பயிர்ச்செய்கையாளர்களுக்கு சிங்கோனா பயிர்ச்செய்கை பற்றிய விளக்கம் இல்லாதிருந்தமை
(2) பயிர்ச்செய்கைக்காக பணத்தை முதலீடு செய்வதற்குப் போதுமான முதலீட்டாளர்கள் இல்லாதிருந்தமை
(3) மூலிகைப் பயிராக இருந்தமையால் உலக சந்தையில் இதற்கான கேள்வி மட்டுப்படுத்தப்பட்டதாக இருந்தமை
(4) சிங்கோனாப் பயிர்ச்செய்கைக்குத் தேவையான நிழல் வழங்குவதற்கு மேலதிக செலவு ஏற்பட்டமை

[பக். 5 ஐப் பார்க்க

- பின்வரும் A தொடக்கம் D வரையிலான தகவல்களைக் கொண்டு **35, 36** ஆகிய வினாக்களுக்கு விடை தருக.

  A - நீதித் துறையின் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கு நீதிச்சேவை ஆணைக்குழு நியமிக்கப்படுதல்
  B - அமைச்சரவை அமைச்சர்களை நியமிக்கும் அதிகாரத்தை ஜனாதிபதி கொண்டிருத்தல்
  C - பிரித்தானிய பேரரசுடன் கொண்டிருந்த அரசியல் யாப்பு ரீதியிலான தொடர்புகள் முடிவடைதல்
  D - அமைச்சரவையின் தலைவர் பிரதமர் ஆவார்

**35.** 1972 அரசியல் யாப்புடன் தொடர்புடைய தகவல்கள் உள்ளடங்கிய விடை எது?
(1) A, B (2) A, D (3) B, D (4) C, D

**36.** 1978 அரசியல் யாப்புடன் தொடர்புடைய தகவல்கள் உள்ளடங்கிய விடை எது?
(1) A, B (2) A, D (3) B, D (4) C, D

- பின்வரும் A, B என்ற கூற்றுக்களைக் கொண்டு **37** ஆம் வினாவுக்கு விடை தருக.

  A - பொஸ்ரன் தேநீர் விருந்து
  B - பஸ்ரீலைத் தாக்குதல்

**37.** பிரான்சியப் புரட்சி தொடர்பாக
(1) A உம் B உம் சரியானவை. (2) A உம் B உம் பிழையானவை.
(3) A சரியானது என்பதுடன் B பிழையானது. (4) A பிழையானது என்பதுடன் B சரியானது.

- பின்வரும் A, B, C, D என்பனவற்றின் கீழ் கூற்றுகள் சோடிகளாகத் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு சொற் சோடியிலும் முதலாவதுக்கும் இரண்டாவதுக்கும் இடையிலான தொடர்பினைப் பரிசீலித்து **38** தொடக்கம் **40** வரையான வினாக்களுக்கு விடை தருக.

  A - (1) - முதலாம் உலக மகா யுத்தம்
  (2) - சரஜிவோ நிகழ்வு
  B - (1) - ஜெர்மனி
  (2) - அச்சு நாடுகள்
  C - (1) - பாதுகாப்பு சபை
  (2) - தேசிய சங்கம்
  D - (1) - இரண்டாம் உலக மகா யுத்தம்
  (2) - ஐக்கிய நாடுகள் சபை

**38.** முதலாவதுக்கும் இரண்டாவதுக்கும் இடையிலான தொடர்பைக் **காட்டாத** சோடி எது?
(1) A (2) B (3) C (4) D

**39.** முதலாவது ஏற்படுவதற்கு இரண்டாவது காரணமாவதைக் காட்டும் சோடி எது?
(1) A (2) B (3) C (4) D

**40.** இரண்டாவது தோன்றியது முதலாவதின் விளைவாக எனக் குறிப்பிடும் சோடி எது?
(1) A (2) B (3) C (4) D

***

OL/2022(2023)/33-T-II



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**33 T II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)

ඉතිහාසය II
வரலாறு II
History II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

* பகுதி **I** இல் வினா இலக்கம் **1** கட்டாயமானது.
* பகுதி **II** இலிருந்து **நான்கு** வினாக்களுக்கும் பகுதி **III** இலிருந்து **ஒரு** வினாவுக்கும் விடை எழுதுக.
* எல்லாமாக **ஆறு** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1.** (அ) (i) கீழே தரப்பட்டுள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இடங்கள் **அனைத்தையும்** வழங்கப்பட்டுள்ள இலங்கைப் புறவுருவப்படத்தில் குறித்துப் பெயரிடுக.

ஜம்புகோளப்பட்டினம், இரணைமடு, மாகம, அனுராதபுரம், கம்பளை, நீர்கொழும்பு, காலித்துறைமுகம், கலாவாவி, யான்ஓயா, கல்ஓயா, மட்டக்களப்பு, யோதவாவி (12 புள்ளிகள்)

(ii) கீழே தரப்பட்டுள்ள வரலாற்று இடங்கள் **அனைத்தையும்** வழங்கப்பட்டுள்ள பகுதி உலகப் புறவுருவப்படத்தில் குறித்துப் பெயரிடுக.

கொன்ஸ்தாந்தினோபிள், சுயஸ் கால்வாய், பம்பாய், பிரான்ஸ், அரபிக்கடல், ஜப்பான் தீவுகள் (06 புள்ளிகள்)

(ஆ) (i) கீழே *A*, *B*, *C*, *D* எனத் தரப்பட்டுள்ள வினாக்களுக்குரிய விடைகளை **ஒழுங்குமுறைப்படி** உங்கள் விடைத்தாளில் எழுதுக.

*A* - இலங்கையில் குடியேற்றங்களை அமைத்த ஆதி மனிதன் எப்பெயரினால் இனங்காணப்பட்டான்?

*B* - “விண்ணிலிருந்து மண்ணில் பொழியும் ஒரு துளி நீரையேனும் மனிதனுக்குப் பயன்படாது கடலில் கலக்க விடமாட்டேன்.” இக்கூற்றினை வெளிப்படுத்திய மன்னன் யார்?

*C* - மோனலீசா சித்திரத்தை வரைந்த கலைஞரின் பெயரைக் குறிப்பிடுக.

*D* - வானலைகள் மூலம் செய்திகளைப் பரிமாற்றம் செய்யும் முறையைக் கண்டுபிடித்தவர் யார்? (04 புள்ளிகள்)

● *A*, *B* என்பவற்றில் காட்டப்பட்டுள்ள படங்களை அவதானித்து, கேட்கப்பட்டுள்ள வினாக்களுக்குரிய விடைகளை வினா இலக்க **ஒழுங்குமுறைப்படி** உங்கள் விடைத்தாளில் எழுதுக.

(ii) 1. படம் *A* இல் காட்டப்பட்டுள்ளது என்ன?
2. அது எதற்காகப் பயன்படுத்தப்பட்டது?
3. இந்த ஆக்கத்துடன் தொடர்புடைய சிதைவுகள் கண்டுபிடிக்கப்பட்ட பிரதேசம் எது?
4. இதனை இயக்குவதற்குப் பயன்படுத்தப்பட்ட இயற்கை சக்தி யாது?

(04 புள்ளிகள்)



*A*

[பக். 2 ஐப் பார்க்க

(iii) 1. படம் *B* இல் காட்டப்பட்டுள்ளது என்ன?
2. இதனைக் கண்டுபிடித்தவர் யார்?
3. இது பயன்படுத்தப்பட்ட கைத்தொழில் எது?
4. இது எந்த விடயத்துக்காகப் பயன்படுத்தப்பட்டது? (04 புள்ளிகள்)



*B*

## பகுதி II

**2.** (i) வரலாற்றுக்கு முற்பட்ட மனிதன் வாழ்ந்த வெட்ட வெளிக் குடியிருப்புகள் **மூன்றின்** பெயர்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) வரலாற்றுக்கு முற்பட்ட மனிதன் தன்து குடியிருப்புகளைத் தெரிவுசெய்வதில் கவனம் செலுத்திய **இரண்டு** காரணிகளை எழுதுக. (04 புள்ளிகள்)

(iii) முன் வரலாற்றுக் காலப்பகுதியில் மனிதன் பயன்படுத்திய தொழினுட்பங்களை **இரண்டு** விடயங்களைக் கொண்டு விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) ஆரம்ப வரலாற்றுக் காலப்பகுதியில் குடியிருப்புக்களின் பரம்பலில் செல்வாக்குச் செலுத்திய **மூன்று** காரணிகளை விளக்குக. (06 புள்ளிகள்)

**3.** (i) புராதன சமூகத்தில் நெற்பயிர்ச்செய்கை மேற்கொள்ளப்பட்ட **மூன்று** போகங்களின் பெயர்களைத் தருக. (03 புள்ளிகள்)

(ii) முற்காலத்தில் சேனைப்பயிர்ச்செய்கையில் பயிரிடப்பட்ட **நான்கு** பயிர் வகைகளைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) புராதன காலத்தில் இந்நாட்டில் பல்வேறு கைத்தொழில்கள் நிலவியதென்பதை **இரண்டு** விடயங்களைக் கொண்டு விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) முற்காலத்தில் இந்நாட்டில் ஒழுங்கமைக்கப்பட்ட உள்நாட்டு வர்த்தகம் நிலவிய முறையினை **மூன்று** விடயங்களைக் கொண்டு விளக்குக. (06 புள்ளிகள்)

**4.** (i) விஜயபாகு கொலையின் பின்னர் கோட்டை இராச்சியம் பிரிக்கப்பட்ட **மூன்று** பிரிவுகளின் பெயர்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் கூற்றுகளுக்குப் பொருத்தமான விடைகளை எழுதுக.

A - பெலந்த பிரதேசத்தில் கோட்டை ஒன்றைக் கட்டி போர்த்துக்கேயருக்கு எதிரான போராட்டத்தை ஆரம்பித்த நபர்

B - மரண சாசனத்தின் மூலம் தனது அரச உரிமையைப் போர்த்துக்கேயரிடம் ஒப்படைத்த மன்னர்

C - ஆசியாவில் ஒல்லாந்தர் தமது செயற்பாடுகளைக் கொண்டு நடாத்திய வர்த்தக சங்கம்

D - கி. பி. 1764 இல் கண்டி ஆக்கிரமிப்பை மேற்கொண்ட ஒல்லாந்த ஆளுநர் (04 புள்ளிகள்)

(iii) கண்டி இராச்சியத்தைக் கைப்பற்றுவதற்கு போர்த்துக்கேயர் மேற்கொண்ட **இரண்டு** முயற்சிகள் பற்றி விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) ஒல்லாந்தர் கண்டி இராச்சியத்துடன் தொடர்புகளைப் பேணுவதற்குப் பின்பற்றிய **மூன்று** கொள்கைகளைப் பற்றி விவரிக்குக. (06 புள்ளிகள்)

**5.** (i) கண்டி இராச்சியத்தில் நடைமுறையிலிருந்த **மூன்று** வரிவசூலிப்பு (பத்தே) ஒழுங்கமைப்பின் பெயர்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) கண்டி இராச்சியத்தில் குற்றவாளிகளுக்கு வழங்கப்பட்ட **நான்கு** தண்டனைகளின் பெயர்களைத் தருக. (04 புள்ளிகள்)

(iii) கண்டி இராச்சியத்தின் பொருளாதார அமைப்பின் **இரண்டு** பண்புகளை விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) கண்டி இராச்சியத்தில் சமூக ஒழுங்கமைப்பில் காணப்பட்ட **மூன்று** பண்புகளை விளக்குக. (06 புள்ளிகள்)

**6.** (i) பிரித்தானியரின் கீழ் கோப்பிப் பயிர்ச்செய்கை பரவியிருந்த **மூன்று** பிரதேசங்களின் பெயர் தருக. (03 புள்ளிகள்)

(ii) கோப்பிப் பயிர்ச்செய்கை வீழ்ச்சியடைவதில் செல்வாக்குச் செலுத்திய **இரண்டு** காரணங்களை எழுதுக. (04 புள்ளிகள்)

(iii) தேயிலைப் பயிர்ச்செய்கை விருத்தியில் செல்வாக்குச் செலுத்திய **இரண்டு** காரணிகளை விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) பெருந்தோட்டப் பயிர்ச்செய்கையை அறிமுகப்படுத்தியதன் காரணமாக இந்நாட்டின் பொருளாதாரத்துக்கு அனுகூலமானதும் பிரதிகூலமானதுமான தாக்கம் ஏற்பட்டுள்ளது என்பதை **மூன்று** விடயங்களைக் கொண்டு விளக்குக. (06 புள்ளிகள்)

**7.** (i) 1956 பொதுத் தேர்தலில் செயற்பட்ட ஐம்பெரும் சக்திகளில் **மூன்று** சக்திகளின் பெயர்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) 1978 அரசியல் யாப்பில் உள்ளடங்கியுள்ள அடிப்படை மனித உரிமைகள் **இரண்டினை** எழுதுக. (04 புள்ளிகள்)

(iii) சுதந்திரத்தின் பின்னரான மூன்று தசாப்த காலத்தில் ஆட்சிக்கு வந்த அரசாங்கங்களினால் கல்வி முன்னேற்றத்துக்காக எடுக்கப்பட்ட **இரண்டு** நடவடிக்கைகளை விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) சுதந்திரத்தின் பின்னர் இலங்கை அரசாங்கங்களினால் நெற்பயிர்ச்செய்கை விருத்திக்காக மேற்கொள்ளப்பட்ட **மூன்று** நடவடிக்கைகளை விளக்குக. (06 புள்ளிகள்)

## பகுதி III

**8.** (i) பிரித்தானியரால் வட அமெரிக்காவில் தாபிக்கப்பட்ட **மூன்று** குடியேற்றங்களின் பெயர்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) ஐரோப்பியர்கள் அமெரிக்காவில் குடியேற்றங்களைத் தாபிப்பதற்கு அடிப்படையாக அமைந்த **இரண்டு** காரணங்களை எழுதுக. (04 புள்ளிகள்)

(iii) பிரான்சிய புரட்சி ஏற்படுவதில் செல்வாக்குச் செலுத்திய **இரண்டு** காரணங்களை விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) ரஷ்யப் புரட்சியின் விளைவுகள் **மூன்றினை** விளக்குக. (06 புள்ளிகள்)

**9.** (i) முதலாம் உலக மகா யுத்தத்துடன் தொடர்புடைய அச்சு நாடுகள் **மூன்றின்** பெயர்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) A தொடக்கம் D வரையான பின்வரும் கூற்றுகளுக்குப் பொருத்தமான விடைகளை அடைப்புக்குறிக்குள் இருந்து தெரிவுசெய்து எழுதுக.

A - ஐக்கிய ஜேர்மனியை உருவாக்குவதற்கு முன்னோடியாக இருந்த தலைவன்.

B - முதலாம் உலக மகா யுத்தத்தின்போது இங்கிலாந்தின் பிரதம மந்திரி

C - இத்தாலியின் பாஸிசவாதத் தலைவர்

D - ஐக்கிய நாடுகள் சபையில் வீற்றோ அதிகாரம் உடைய நாடு.

(லொயிட் ஜோர்ஜ், வின்ஸ்சன்ட் சேர்ச்சில், பெனிடோ முசோலினி, அடோல்ப் ஹிட்லர், சீனா, இந்தியா, ஓட்டோ வொன் பிஸ்மார்க், கெய்சர் வில்லியம்) (04 புள்ளிகள்)

(iii) முதலாம் உலக மகா யுத்தத்தின் **இரண்டு** விளைவுகளை விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) இரண்டாம் உலக மகா யுத்தம் ஏற்படுவதற்குக் காரணமான **மூன்று** விடயங்களை விளக்குக. (06 புள்ளிகள்)

***

97153



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**33 STE II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)

# ඉතිහාසය II
# வரலாறு II
# History II

1. (අ) (i)
1. (அ) (i)
1. (a) (i)

විභාග අංකය / சுட்டெண் / Index No. ..........................






[ දෙවැනි පිටුව බලන්න / மறுபக்கம் பார்க்க / See next page

